


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை



## வாழ்வளிப்போம்

நீதிமன்றத்தில், அபராதம் அல்லது சிறைவாசம் கூறி குற்றமிழைப்பவர்களைத் தண்டிப்பது வழக்கம். சில சமயங்களில் குற்றவாளியை மன்னித்து விடுதலை செய்வதுண்டு. நன்னடத்தையுடன் வாழவேண்டும் என்று எச்சரித்து, கண்காணிப்பு அதிகாரியின் பார்வையில் வாழ அனுமதிப்பதும் உண்டு. கண்காணிப்புக்கு அடங்கி நடப்பதாக உறுதி கூறினால்தான், பதினான்கு வயது மீறிய குற்றவாளிக்கு, எச்சரிக்கை விடுதலை கிடைக்கும்.

நெறி தவறியவர்களை நல்வழிப்படுத்தும் முயற்சியில் சமூகத்திற்கும் பங்குண்டு என்ற நம்பிக்கையில்தான் கண்காணிப்பு முறை அமைக்கப்பட்டது. நீதிமன்றத்திற்கு தந்த வாக்குப்படி, கண்காணிப்புக்கு அடங்கி நடக்கும் பொறுப்பு குற்றவாளிக்கு உண்டு. திருந்தி வாழ வாய்ப்பளித்து, அவனை (அல்லது அவளை) நல்வழிப்படுத்தும் பொறுப்பை, சமூகத்தின் சார்பில், கண்காணிப்பு அதிகாரி ஏற்றுக்கொள்கிறார்.

நன்னடத்தையுடன் வாழ்வதாக உறுதிகூறி விடுதலை பெறுபவன், அவ்வப்போது, கண்காணிப்பு அதிகாரியைச் சந்தித்து வரவேண்டும். அவனுடைய பிரச்னைகளைப்பற்றி ஆலோசிக்கவும், நடத்தையைக் கவனிக்கவும், கண்காணிப்பு அதிகாரி, அவனுடைய வீட்டுக்குச் செல்வதுமுண்டு. இளங்குற்றவாளியாக இருந்தால், அவனை நல்வழிப்படுத்துவது பற்றி, கண்காணிப்பு அதிகாரி, பெற்றோரைக் கலந்தாலோசிப்பார். அவனைப் பள்ளியிலோ, தொழிற்சாலையிலோ சேர்த்திருந்தால் ஆசிரியரையோ, தொழிற்சாலை நிர்வாகியையோ சந்தித்து பேசுவார்.

கண்காணிப்புக்குட் பட்டவன் அனாதையாக இருந்தால், அவனுக்கு உணவும், உறைவிடமும், வேலையும் தேடித்தரும் பொறுப்பை கண்காணிப்பு அதிகாரி எடுத்துக் கொள்வதுண்டு. குடி, கூடாநட்பு, வறுமை எனப் பல காரணங்களால், ஒருவன், குற்றம் செய்ய நேரிடுகிறது. திருந்தி வாழ உறுதி கூறினாலும், வசதியும், வாய்ப்பும் கிடைத்தால் தான் அவன் பயனடைய முடியும். அவனுக்கு அறிவுரை வழங்கி, ஆடையும் உண்டியும் கிடைக்க உதவி செய்து, அவனை நல்வழிப் படுத்தும் பொறுப்பு கண்காணிப்பு அதிகாரியைச் சேர்ந்தது. குற்றவாளியின் குணமறிந்து, திருத்த முயல்வதே சிறந்தது. இதற்காக, கண்காணிப்பு அதிகாரி, உளவியல் நிபுணரையும், சமூக நல ஊழியரையும் கலந்தாலோசிப்பதுண்டு. உடலில் கோளாறு இருந்தால் அதை அகற்ற வைத்

(3-பக்கம் பார்க்க)

## மக்கள் வாழ்வும் இயற்கை வனப்பும்



நீலகிரி மலைகளில் ஏற்பட்டுள்ள க்ஷேம நல விஸ்தரிப்புத் திட்ட நிலையமொன்றில் ஒரு பூர்வகுடி ஸ்திரீ தையல் யந்திரத்தை இயக்கக் கற்றுக்கொள்கிறாள்.

1954 ஆகஸ்ட் மாதத்தில் சமூக க்ஷேமநல போர்டு க்ஷேம நல விஸ்தரிப்புத் திட்டங்களை ஆரம்பித்ததிலிருந்து நாட்டின் பல்வேறு பகுதிகளிலுள்ள பத்தாயிரத்துக்கும் அதிகமான கிராமங்கள் இத் திட்டங்களின் வியாபகத்துக்குள் வந்துள்ளன. இத்திட்டங்கள் சமுதாய அபிவிருத்தி ஸ்தாபனத்தின் நெருங்கிய ஒத்துழைப்புடன் வேலை செய்து வருகின்றன; கிராமாந்தரப் பிரதேசங்களிலுள்ள மாதர்கள், குழந்தைகள் ஆகியோர் சம்பந்தமான க்ஷேமநல நடவடிக்கைகளை மென்மேலும் அதிகமாக மேற்கொண்டு வருகின்றன. அத்திட்டங்களின் நடவடிக்கைகளில் பாலர் நிலையங்கள், பிரசவ-சிசு சுகாதார சேவைகள், ஸ்திரீகளுக்கு எழுதப்படிக்கக் கற்றுக்கொடுப்பது, ஸ்திரீகள் சமூகக் கல்வி, கலை-கைவேலை நிலையங்கள், பொழுதுபோக்கு நடவடிக்கைகள் முதலியவை அடங்கியுள்ளன.

22—3—1959

## நமது தேசிய சாதனைகள்

# படிப்பினைகள்

இரண்டாவது ஐ தாண்டுத் திட்டத்தில் இ ரை பாதியைத் ண்டியிருக்கிறோம். தான் நாம் இன்னும் இரண்டு அது மூ லம் உள்ளது. அதை ஆண்டு வற்றுவது சம்பந்தமாக, நின பட்டுள்ள பல பிரசனைகளுக்கு இன்னும் சரியாகத் தீர்வு காணப்படவில்லை. உதாரணமாக விளைபொருள் உற்பத்தி விஷயத்தில் காணப்பட வேண்டிய அளவுக்கு முன்னேற்றம் காணப்படவில்லை. தொழில்துறையிலும்கூட குறைவுகள் ஏற்பட்டிருக்கின்றன; எல்லாவற்றுக்கும் மேலாக திட்ட காரிய நிறைவேற்றத்தில் அந்நிய நாணயச் செலாவணித் தட்டுப்பாட்டையும் சமாளித்தாக வேண்டியிருக்கிறது. இரண்டாவது திட்டமே இந்த அளவில் இருக்கையில், மூன்ருவது திட்டம்பற்றி இப்பொழுது பேசுவதா என்று பலர் கேட்கக்கூடும்.

திட்டத்துறையில் நாம் பெற்றுள்ள அனுபவம் போதிக்கும் முக்கியமான பாடங்களிலொன்று, முன்கூட்டித் திட்டமிடுவதற்கு உரிய தருணத்துக்காகக் காத்திருக்க வேண்டியதில்லையென்பதாகும். நம்முடைய பிரச்னைகளில் பெரும்பாலானவை நீண்டகாலத் தன்மை உடையனவாகவும், நீண்டகால அடிப்படையில் தீர்வு காண வேண்டியவையாகவும், நீண்டகால அடிப்படையில் திட்டமிட்டு வேலை செய்ய வேண்டியவையாகவும் இருக்கின்றன என்பதோடு, சமீப காலத்திலேயே சமாளிக்க வேண்டியிருக்கும் விஷயங்களில்கூட அதற்கான ஆயத்தங்களைச் செய்துகொள்ள அதிக காலம் பிடிக்கும். உதாரணமாக, முதலாவது திட்டத்தில் உருக்கு உற்பத்திப் பெருக்கம் விஷயத்தில் லட்சிய உற்பத்தியில் பின்னும் அதிகப்படியாக 5 லட்சம் டன் சேர்த்துக்கொண்டு, அதற்கான நடவடிக்கையை எடுத்துக் கொண்டிருந்திருப்பின், இரண்டாவது திட்டகாலத்தில் உருக்கு இறக்குமதிக்காகச் செலவிட்டுள்ள கோடிக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள அந்நிய நாணயச் செலாவணியை மிச்சப்படுத்தியிருக்கலாம் என்று இப்பொழுது உணருகிறோம். இதுபோன்று பல உதாரணங்களை எடுத்துக்கூற முடியும்.

நீண்டகால நோக்குடன் திட்டமிடுவது வெறும் கற்பனை ரீதியான வேலை என்றும், பிரத்தியட்ச நிலைமைகளுக்குத் தொடர்பேயில்லாதது என்றும் கருதுகிற பலர் எப்போதுமே இருப்பார்கள். அவர்கள், குறுகிய காலத்துக்குள்ளேயே பலன்தரக்கூடிய சிந்தனையையும் செயலையுமே வரவேற்பார்கள்; அந்தப் போக்குதான் "நடைமுறையில் சாத்திய" முள்ளதும், "பிரத்தியட்ச நிலைமையை அனுசரித்ததும்" ஆகும் என்றும் அவர்கள் உறுதியாக நம்பிக்கை கொண்டிருக்கின்றனர்.

இந்தப் "பிரத்தியட்சவாதிகள்" இதற்கு முன்பு பல முக்கியமான கொள்கைகளிலும், செயல்களிலும் செல்வாக்கும் பெற்றுள்ளனர். எனவே, முதல் திட்டகாலத்தில் உள்நாட்டு உருக்கு உற்பத்திப் பெருக்கத்துக்கு வகை செய்யத் தவறியது, திட்டத்தில் அத்தகைய விஸ்தரிப்புக்கான ஷரத்து எதுவும் சேர்க்கப்படவில்லை என்பதன் காரணமாக நேரிட்டது அல்ல, முதல் திட்டத்தில் இது விஷயமாக சந்தேகத்துக்கு இடமின்றி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

இரண்டாவது திட்டகாலத்திலும், ஏற்கெனவே ஏற்றுக்கொள்ளப்பட்ட கொள்கைகளிலிருந்து "பிரத்தியட்ச நோக்கு" காரணமாக அதிகப் பணச் செலவில் மாட்டிவிடுகிற இதே போன்ற மாறுதல்கள் ஏற்பட்டன. தொழில் முன்னேற்றத்துக்கும் பின்னும் துரிமதாக நடவடிக்கை எடுத்து வருவதற்கு அடிப்படையாக யந்திரத் தயாரிப்புத் தொழில்களின் அபிவிருத்திக்கு இரண்டாவது திட்டத்தில் உச்ச முதன்மை அளிக்கப்பட்டது. இரண்டாவது திட்டத்தில் உருக்கு விஷயத்தில் முக்கியத்துவம் அளிக்கப்பட்டதற்கு, இந்த எஞ்சினீயரிங் தொழில்களுக்கு ஒரு ஆதாரத்தை ஏற்படுத்தி அவற்றுக்கான மூலப் பொருள்களையும் அளிக்க வகை செய்ய வேண்டுமென்பது பெருமளவில் காரணமாக இருந்தது.

ஏற்கெனவே ஆரம்பிக்கப்பட்டுள்ள வேலைத்திட்டங்கள் யாவும் திட்டமிட்டபடியே நடைபெற்று வருமென்றபோதிலும் இன்னும் ஆரம்பிக்கப்படாத வேறுசில திட்டங்கள், அதாவது வார்ப்படசாலைகள், உருக்கு ஆலைகள் ஆகியவையும் சில ரசாயன உரத் தொழிற்சாலைகளும், மின்சார உற்பத்தி சாதனங்களும்கூட, இரண்டொரு ஆண்டுக் காலத்துக்கு ஒத்திவைக்கப்படலாம்.

இரண்டாவது திட்டத்தின் கீழ், யந்திர உற்பத்தித் தொழில்களுக்காக ஒதுக்கப்பட்ட 150 கோடிரூபாய் தொகையில் பாதித் தொகைகூட இக்காலத்துக்குள் பயன்படுத்தப்படுமோ என்பது சந்தேகமாக இருக்கிறது. மூன்ருவது திட்டத்தில் தொழில் அபிவிருத்தித் திட்டத்துக்காக அதிக அளவில் அந்நிய நாணயச் செலாவணி தேவைப்படும் என்பதற்கு இது ஒரு முக்கிய காரணமாகும்.

உற்பத்திக்குத் தக்கவாறு போதிய அளவுக்குத் தேவை இருக்காது என்பதாக முதல் திட்ட காலத்தில் பலர் எடுத்துக் கூறிவந்த திட்டங்களில் சிந்திரி உரத் தொழிற்சாலையும் ஒன்ருகும். "இலாபகரமில்லாத" தொழிலை ஸ்தாபிக்கும் சர்க்கார் நடவடிக்கைகளுக்கு ஒரு உதாரணமாக அதுகூறப்பட்டு வந்தது. இக்கருத்து சில வருஷங்களுக்கு முன்னர் பிரபலமாக இருந்து வந்தது. பொருளாதார நிர்வாகிகளிடையேகூட இக்கருத்து 1957 வரையில் பலமாகப் பரவியிருந்தது. இரண்டாவது திட்டகாலத்தில் ரசாயன உர உற்பத்தியின் விஸ்தரிப்பு வேகத்தைக் குறைப்பதனுல் பாதகம் எதுவும் இல்லை என்று அவர்கள் கருதும்படி ஏற்பட்டது. ஆனுல் இது எவ்வளவு தவருன கருத்து என்பது தமது அனுபவத்தின் மூலம் நிரூபணமாகிவிட்டது. நாட்டில் ரசாயன உரத் தட்டுப்பாட்டைச் சமாளிப்பதற்காக சர்க்கார் கூடிய சீக்கிரத்திலேயே புதிதாக மூன்று ரசாயன உரத் தொழிற்சாலையை நிறுவ இப்பொழுது உத்தேசித்துள்ளனர்.

இந்த அம்சங்களை மனதில் கொள்வது நன்மைதரும்; நம் கஷ்டங்களுக்கு யார்மீது பழி போடலாம் என்பதற்காக அல்ல இது. ஆனுல், "பிரத்தியட்ச நோக்கு" "காரிய சாத்தியம்" என்ற வார்த்தைகள்மூலம் 3-வது திட்ட காலத்தில் பல முக்கிய விஷயங்களில் மெதுவாக வேலை செய்யும்படி பண்ணிவிடக்கூடிய சிலரிடமிருந்து நம்மைக் காப்பாற்றிக்கொள்வதற்கு இப்பரிசீலனை உதவும். அவர்கள் கூற்றுக்கள் எல்லாம் தவருகத்தான் இருக்கவேண்டுமென்பதில்லை, ஆனுல், நாம்அவைகளைச் சரிவர ஆராய்வது அவசியம்.

மூன்ருவது திட்டத்தில் மேற்கொள்ளப்படும் முயற்சி, ஆதாரங்களின் பிரச்னையுடன்—உள்நாட்டு, வெளிநாட்டு ஆதார வசதிகளுடன்—இணைந்துள்ள ஒரு விஷயம் என்பது வாஸ்தவமே. ஆனுல் நம் நாட்டைப்போன்ற நாடுகளில் அபிவிருத்தி காரியங்களுக்காகக் கிடைக்கும் ஆதாரங்களின் அளவு நிலையாக இவ்வளவுதான் என்று வரையறைக்குட்பட்டது அல்ல. நாம் கடைபிடிக்கும் கொள்கைகளையும், அவற்றை நிறைவேற்றி வருவதில் காட்டப்பட்டுவருகிற உறுதியையும் பெருமளவுக்குப் பொறுத்து அதுவும் மாறுபடும். ஆதார வசதிகள்பற்றி ஆசைக் கனவுகள் காண்பதோ அல்லது வேறு நாடுகளில் ஏற்பட்டுள்ள அபிவிருத்தியை உதாரணமாகக் கொண்டு திட்டமிடுவதோ சரியாகாது. நம் நிலைமை வேறு.

இந்நாட்டில் வேலையில்லாமலும், பூரண அளவுக்கு வேலையில்லாமலும் பெருவாரியாகத் தொழிலாளர்கள் இருந்துவருவதைக்கொண்டு, அவர்கள் அவ்வ

(10-ம் பக்கம் பார்க்க)

(1-ம் பக்கத்தொடர்ச்சி)

தியருடைய உதவியை நாடுவதுமுண்டு.

பத்தொன்பதாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் இங்கிலாந்து சர்ச்சைச் சேர்ந்த சில ஊழியர்கள் இந்த நற்பணியைத் தொடங்கினுர்கள். இங்கிலாந்து சர்ச்சின் மிதக்குடிப்பிரசார சபை, நீதி மன்றத்திற்கு வரும் குடிகாரர்களை நல்வழிப்படுத்தத் திட்டமிட்டது. குடிகாரர்களுக்கு ஆலோசனை கூறி உதவவும், அறிவுரை வழங்கவும் மன்ற ஊழியர்களை நியமித்தது. இவர்களுடைய முயற்சியால் முதற்குற்றம் செய்த பலர் திருந்தி வாழத் தொடங்கினுர்கள். இதைக் கவனித்த அரசாங்கம், குற்றம் புரிந்தோருக்கு, திருந்தி வாழ வாய்ப்பளிக்கும் நோக்கத்துடன், 1907-இல் ஓர் சட்டமியற்றியது. இதனுல் குற்றவாளிகளுடன் உறவாடி அவர்களை நல்வழிப்படுத்த, ஒவ்வோர் நீதி மன்றத்திலும், கண்காணிப்பு அதிகாரியை நியமிப்பது சாத்தியமாயிற்று.

சந்தர்ப்பத்தினுலோ, உணர்ச்சிவசப்பட்டோ, சிலர் குற்றம் செய்து விடுகிருர்கள். குற்றவாளிகள் அனைவரையும் தீயவர்கள் என்று கூறிவிட முடியாது. நெருங்கிப் பழகி நல்லுரை கூறுவதால் பலரைத் திருத்திவிட முடியும் என்ற நம்பிக்கையால்தான் 1907ஆம் ஆண்டு கண்காணிப்புச் சட்டம் உருவாயிற்று. முதல் ஆண்டிலேயே, குற்றம் கடிவதில் புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டு விட்டது. சுமார் 8,000 குற்றவாளிகள் கண்காணிப்பு நிபந்தனையில் விடுதலை பெற்ருர்கள். இந்த முயற்சி வெற்றி பெற்றதால், ஆண்டுக்கு ஆண்டு, விடுதலை பெறுவோர் எண்ணிக்கையும் அதிகரித்தது. 1957 இல், 34,000 பேர்கள், நன்னடத்தையுடன்வாழ்வதாக உறுதி கூறி விடுதலை பெற்ருர்கள். இவர்களில் சிறுவர்களுமுண்டு, பெரியோர்களுமுண்டு. கொலை நீங்கலாக, கடுங்குற்றங்களை செய்தோரும் உண்டு.

ஒரு குற்றவாளியை, கண்காணிப்பில் விடுதலை செய்ய, அவனுடைய வாழ்க்கை, சூழ்நிலை, குற்றம் செய்ய நேர்ந்த சந்தர்ப்பம், மனநிலை முதலியவைபற்றித் தெரிந்து கொள்வது அவசியம். கண்காணிப்பு அதிகாரி இந்தத் தகவல்களைத் தொகுத்து நீதிபதியிடம் சமர்பிப்பார். குற்றவாளியும் அதிகாரியும் ஒருவரை ஒருவர் தெரிந்து கொண்டால் தான் சீர்திருத்த முயற்சி வெற்றி பெறும்.

பொதுவாக முதற்குற்றம் செய்தவர்களில் நூற்றுக்கு எண்பது பேர்கள், நன்னடத்தை ஜாமீன் காலத்திற்குள்ளேயே (ஒன்று அல்லது இரண்டாண்டுகள்) திருந்தி விடுகிருர்கள். பல குற்றங்களைச் செய்தோரும், நன்னடத்தை உறுதி மொழி கொடுத்து விடுதலை பெறுவதுண்டு. இவர்களில் நூற்றுக்கு அறுபத்தைந்து பேர்கள் திருந்தி விடுகிருர்கள்.

திருந்தி வாழ்வதாக உறுதி கூறி தவறியவர்கள் சட்டத்தின் ஆணைக்குத் தப்பி விடுவதில்லை. உறுதிமொழியை மீறினுலும், கண்காணிப்புக் காலத்தில், புதிய குற்றம் செய்தாலும், புதிய குற்றத்துடன், பழைய குற்றத்திற்கும் சேர்த்து இரட்டிப்புத் தண்டனை பெற வேண்டும்.

பிரிட்டிஷ் நீதி மன்றம் ஒவ்வொன்றிலும் கண்காணிப்பு அதிகாரி உண்டு. இங்கிலாந்திலும் வேல்ஸிலும் 1400 அதிகாரிகளும், ஸ்காட்லாந்தில் 125 அதிகாரிகளும் இருக்கிருர்கள். குற்றவாளிகளைப்பற்றி தகவல் சேகரிப்பதுடன், விசாரணையின்போது நீதி மன்றத்தில் இருப்பதால், கண்காணிப்பு அதிகாரிகள், வேறு பல பொறுப்புக்களையும் ஏற்றுக் கொள்கிருர்கள். கூடா நட்பால் வழி தவறிய இளங் குற்றவாளிகளுக்கு பாதுகாப்பு அளிக்க வேண்டிய சந்தர்ப்பங்களில் கண்காணிப்பு அதிகாரியின் உதவி நாடப்படுகிறது.



இல்லினுய்ஸ் ராஜ்யத்தில் ஸ்பிரிங்பீல்டு நகரில் லிங்கன் வசித்த வீடு.

சீர்திருத்தப் பள்ளியிலிருந்து வெளிவரும் இளைஞர்களின் வாழ்க்கையை கவனிப்பது, சிறையிலிருக்கும் கைதியின் குடும்பத்திற்கு சட்டரீதியில் உதவுவது எனப் பல பொறுப்புகளை, கண்காணிப்பு அதிகாரிகள் ஏற்றுக் கொள்கிருர்கள்.

குற்றவாளிகளுக்கு தண்டனை அளிப்பதை விட, திருந்தி வாழ வாய்ப்பளிப்பதால், அவர்களும் நன்மை அடைகிருர்கள், சமூகத்திற்கும் லாபமுண்டு.

❖ ❖ ❖

# உல்லாச வேளை

## "அலாவுதீனும் அதிசய விளக்கும்"

"ஆயிரத்தியோரு இரவுகள்" என்ற அருமையான அராபியக் கதைகளைப் படிக்காதவர்களே இல்லை எனலாம். எல்லா நாடுகளிலுமுள்ள பல தலைமுறையினர்களும், இக்கதைகளை மீண்டும் மீண்டும் படித்து இன்புற்று வந்துள்ளனர்.

மாஸ்கோ மத்திய பாவைக் கூத்து மன்றத்தினர், பாரசீக ராணி ஷகராஜாதேவியின் கதைகளில் ஒன்றை, பொம்மலாட்ட நாடகமாக அமைத்துள்ளனர். கிழக்குலகு என்பது நம்பமுடியாத அதிசயங்களும் வனப்பும் நிறைந்தது என்பதே பொதுவான கருத்தாக இருந்து வருகிறது. இது பொம்மலாட்டத்தில் எழிலுறச் சித்திரிக்கப்படுகிறது.

மத்திய பாவைக்கூத்து மன்றத்தார், மூலக்கதையை சிறிதும் மாற்றமின்றி அப்படியே பின்பற்றவில்லை. மன்றக் கலைஞர்களின் கற்பனை வளம் சேர்க்கப்பட்டு மூலக்கதை மேலும் செழுமையடைந்துள்ளது. "அலாவுதீனும் அதிசய விளக்கும்" என்ற கதையை அடிப்படையாகக் கொண்ட இந்நாடகம் சதிகார மந்திரி ஒருவரை எதிர்த்து ஒரு இளைஞன்—மக்களின் புதல்வன்—நடத்தும் வீரமிக்கப் போராட்டத்தைச் சித்திரிக்கிறது.

இத்தகைய கதைகளில் பெரும்பாலும் பின்பற்றப்படும் "கிழக்குலக பாணி"யில் போலி இனிப்பும், காமக் களியாட்டமும், ஆபாசமான வசனங்களும் நிறைந்திருப்பதுண்டு. ஆனால் அவையெல்லாம் வெற்றிகரமாகத் தவிர்க்கப்பட்டுள்ளது. எளிமையும் எழிலும் பின்னிப்படர்ந்துள்ள முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது. உயரிய கற்பனைக்கும் நாசூக்கான நகைச் சுவைக்கும் இது உறைவிடமாக உள்ளதை எவரும் காணத் தவற முடியாது.

### முதலாவது அங்கம்:

முதலாவது காட்சி: (கடை வீதி): பிரகாசமான சூரிய ஒளியிலே தரையில் படுத்துக்கொண்டு பாட்டுப் பாடுகிறான், அலாவுதீன். ஒரு "பானி வாலா"வும் (தண்ணீர் விற்பவன்), மீன் கூடைக்காரனும் அவ்வழியாகச் செல்கின்றனர். தெருவிலுள்ள ஒரு சிறுவன் மீன் கூடையிலிருந்து ஒரு பெரிய மீனைத் திருடிவிடுகிறான். இதனால் கலாட்டா ஏற்படுகிறது. இதில் அலாவுதீனும் பங்கு கொள்கிறான். அச்சமயம் மந்திரி அங்கு வருகிறான். மீனை உண்மையில் திருடிய பையன், அந்த மீனை மந்திரிக்கு வெகுமதியாக அளிப்பதற்காக எடுத்துச்சென்று கொண்டிருப்பதாகவும், அலாவுதீன் அதைத் தன்னிடமிருந்து பறித்துக் கொண்டதாகவும் கூசாமல் பொய் சொல்கிறான். மந்திரி அந்த மீனைப் பெற்றுக்கொண்டு, அலாவுதீனை சாட்டையால் அடிக்கும்படி உத்தரவிடுகிறான். காவலாளிகள் அலாவுதீனை அடிக்கிறார்கள். அச்சமயம், இளவரசி பதூர் அவ்வழியாக வெள்ளை யானைமீது பவனி வருகிறாள். அலாவுதீனைக் கண்டு மனமிரங்கி, அடிப்பதை நிறுத்துமாறு கட்டளையிடுகிறாள். இளவரசியின் அழகில் அலாவுதீன் சொக்கிப்போகிறான். அவள் செய்த உதவிக்கு நன்றியாக வெகுமதியுடன் வந்து அவளைக் காண்பதாக வாக்குறுதி அளிக்கிறான்.

இரண்டாவது காட்சி:

மந்திரி ஒரு ஜோசியரை வரவழைத்து, பதூர் இளவரசியைத் தான் அடைய முடியுமா என்று ஜோசியம் பார்த்துக் கூறும்படிக் கட்டளையிடுகிறான். அச்சமயம் மந்திரியின் சமையல்காரன் அங்கு வருகிறான், மந்திரி கொண்டு வந்த மீனின் வயிற்றில் ஒரு சிமிழ் இருப்பதாக அறிவிக்கிறான். சிமிழுக்குள் ஒரு காகிதத்தில் புரியாத மொழி ஒன்றில் ஏதோ எழுதப்பட்டுள்ளது. அந்த சூசகத்தை ஜோசியர் வெளிப்படுத்துகிறார்: "வேண்டியதெல்லாம் தரும் அதிசய விளக்கு ஒன்று இருக்கும் இடம் இந்தக்காகிதத்தில் குறிக்கப்பட்டுள்ளது. ஆனால் அந்த விளக்கு ஒரு சாபத்தீடுக்கு உள்ளாயிருக்கிறது. ஹஸனுடைய மகனான அலாவுதீன் என்பவனாலேயே இந்த சாபத்தைப் போக்கமுடியும்!" அலாவுதீனைப் பற்றி மந்திரியும் சரி, ஜோசியரும் சரி கேள்விப்பட்டதில்லை. அவனை எங்கு கண்டுபிடிப்பது என்பதும் அவர்களுக்குத் தெரியாது. எப்படியாவது அலாவுதீனைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று மந்திரி ஜோசியருக்குக் கட்டளை பிறப்பிக்கிறான். இதில் தவறினால் தலையை வாங்கிவிடுவேன் என்கிறான்.

மூன்றாவது காட்சி (சுல்தானுடைய மாளிகையின் தோட்டம்): இளவரசி பதூர் தனது பணிப்பெண் ஒருத்தியுடன் ஆனந்தமாக விளையாடிக் கொண்டிருக்கிறாள். வில்லும் கையுமாக அலாவுதீன், அத்தோட்டத்திற்குள் நுழைகிறான். ஒரு மரத்திலுள்ள ஆப்பிளைப் பறிக்க பதூர் கையை உயர்த்தும்போது, அந்த ஆப்பிளை அவன் குறிவைத்துத் தாக்கி கீழே வீழ்த்துகிறான். சுற்றுமுற்றும் பார்க்கிறாள் இளவரசி. அந்தத் துடுக்கான வாலிபன் அவள் கண்ணில் பட்டுவிடுகிறான். தான் மிகவுயர்ந்த பொருளாக மதித்துவரும் தனது வில்லை, அவன் அவளிடம் வெகுமதியாக அளிக்கிறான். இச்சமயத்தில் சுல்தான் தோட்டத்திற்குள் பிரவேசிக்கிறான். அலாவுதீன் ஒளிந்து கொள்கிறான். நாட்டிலேயே மிகச் செல்வந்தனான மந்திரி பதூரை மணக்க விரும்புகிறான் என்ற சேதி தனது மகளுக்கு மட்டற்ற மகிழ்ச்சி அளிக்கும் என்று சுல்தான் நினைக்கிறார். ஆனால் பதூர், மந்திரியை மந்தியுடன் ஒப்பிடுகிறாள். ஒருக்காலும் மந்திரியை மணக்க மாட்டேன் என்கிறாள். ஆனால் முடிவில், தங்கத்தாலான அரண்மனை ஒன்றை மந்திரி எனக்குப் பரிசாக அளித்தால்தான் திருமணத்திற்குச் சம்மதிப்பேன் என்று குறும்புத்தனமாகக் கூறுகிறாள். இந்த வாக்குவாதத்தைக் கேட்டுக்கொண்டிருந்த அலாவுதீன் பதூரின் துணிச்சலைப் பாராட்டுகிறான். "ஆஹா! இவளையே நான் மணப்பேன்!" என்று மெய்மறந்து கூவிவிடுகிறான். அரண்மனைத் தோட்டத்தில் திருடன்போல் நுழைந்த அவனைப் பிடிக்கும்படி சுல்தானும் மந்திரியும் காவலாளிகளுக்கு கட்டளை இடுகின்றனர். அலாவுதீனைக் காவலாளிகள் இழுத்துச் செல்கிறார்கள். "சுவர்ண-மாளிகை கட்டித் தருவேன் நான்" என்று வாக்குறுதி அளிக்கிறான்.

நான்காவது காட்சி:

ஹஸனுடைய மகன் அலாவுதீனை எப்படியாவது கண்டு பிடித்து, அவன் உதவியால் அதிசய விளக்கை அடைந்தே தீரவேண்டும் என்று மந்திரி கர்ஜிக்கிறான். அரசர்கள், புகழ்வாய்ந்த வீரர்கள், படைத் தலைவர்கள் ஆகியவர்கள் மத்தியில் அலாவுதீன் என்ற பெயர் கொண்டவர் எவரும் கிடைக்கவில்லை. இதனால் ஜோசியர்பாடு திண்டாட்டமாகிவிடுகிறது. இருட்டறையில் ஜோசியரை அடைத்துவைத்து அடுத்த நாள் சிரச்சேதம் செய்யும்படி மந்திரி ஆணை இடுகிறான்.

ஐந்தாவது காட்சி: அலாவுதீன் சிறைக்குள் இரும்புச் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டுக் கிடக்கிறான். ஆயினும் பதூரை எண்ணி அவன் காதல் கீதம் பாடுகிறான். திடீரென்று இளவரசி அவன் முன் வந்து நிற்கிறாள். அவனை விடுதலை செய்யுமாறு காவலாளிகளைப் பணிக்கிறாள். தனக்காக சிறைக்குள் தள்ளப்பட்ட அந்த வீர வாலிபன் குறித்து அவள் நெஞ்சம் உருகுகிறது. "உன்னை நான் மணக்க விரும்புகிறேன்" என்று அலாவுதீன் மீண்டும் கூறுகிறான். "இங்கிருந்து சீக்கிரம் புறப்படுங்கள். விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களை அணிந்துகொண்டு, தங்கவாள் சகிதமாக சுல்தானைப்

(8ம் பக்கம் பார்க்க)

### சுதந்திரத்துடன் வாழ வழி காட்டும் நாடு

# இந்தியா

அரசியல் சட்டத்தில் எழுதி வைக்கப்பட்ட உரிமைகளை அமல் நடத்தத் துணிவு வேண்டும்; அத்துணிவு நமக்கு உண்டு என்பதை நமது நாடு நிரூபித்து விட்டது.

சாசனங்களும், விடுதலைப்பிரகடனங்களும், அரசியல் சட்டங்களும் மனிதரைச் சுதந்திரமுள்ளவர்களாக ஆக்கிவிடமாட்டா. சுதந்திரமுள்ளவர்களாக இருப்பதற்கு அவை வாய்ப்பளிக்கலாம், உரிமை வழங்கலாம், ஆற்றலும் தரலாம். ஆயினும், சுதந்திரமாய் இருப்பதற்கு மக்கள் அந்த உரிமையை உபயோகிக்க வேண்டும், அந்த வாய்ப்பையும், அந்த ஆற்றலையும் பயன் படுத்த வேண்டும்.

ஆசியாவில் புதிய நாடுகள் ஆட்டங்கண்டு, சர்வாதிகார நாடாகி வருகின்றன; ஆப்பிரிக்காவில் புதிய நாடுகள் உதயமாகின்றன. இவ்வேளையில், மனிதன் தனது சுதந்திரத்துக்காக இன்றியமையாமல் செய்ய வேண்டியது என்ன என்று சிந்திப்பது முக்கியமாகும்.

நாட்டின் சுதந்திரம் உண்மையாகவே நிலை நிற்கவேண்டுமாயின், மூன்று காரியங்கள் இன்றியமையாதவை. ஒன்று, நாட்டில் தொன்று தொட்டு நிலவி வரும் தீமைகளை ஒழித்தல். இரண்டு, அச்சத்தையும் சந்தர்ப்ப வாதத்தையும் அறவே ஒதுக்கல். மூன்று, நிலையான நெறிகளைப் பற்றித் தீவிரமாகச் சிந்தித்தல். இவை மூன்றும் நாட்டின் சுதந்திரம் மெய்யாகவே வாழ்வதற்குக் கொடுக்கவேண்டிய விலைகளாகும். இந்த உண்மையை இந்தியா குடியரசாக விளங்கும் இக்குறுகிய கால வரலாறு எடுத்துக்காட்டுகிறது.

தீண்டாமை என்னும் பழமையான தீமையை வேரோடு களைந்தெறிய நமது நாடு முனைந்துள்ளது. நமது அரசியல் சட்டம் தீண்டாமையை ஒழித்துவிட்டது; எவ்வகையிலாயினும் தீண்டாமையைக் கடைப்பிடிப்பது தகாது என்று அது தடை விதித்துள்ளது. அந்த அரசியல் சட்ட விதியை மீறுவோர்க்கு இன்னின்ன தண்டனை கிடைக்கும் என்றும் சட்டம் இயற்றப்பட்டுள்ளது. அச்சட்டம் ஆட்சி செலுத்தப் படுவதற்கு ஆதரவாக நீதி மன்றங்களும் சுறுசுறுப்பாக ஒத்துழைக்கின்றன. தீண்டாதாராக இருந்தவர்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப ராஜ்ய சட்டசபைகளிலும் பார்லிமெண்டிலும் அவர்களுக்கு ஸ்தானங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. சர்க்கார் வேலைகளிலும் ஒரு பகுதி அவர்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ளது. பிற்பட்ட வகுப்பினர் படிப்புக்காக மத்திய அரசாங்கம் உபகாரச்சம்பளங்கள் ஏற்படுத்தியுள்ளது. இவை இந்தியாவில் கல்வி கற்பதற்கு மட்டுமல்ல; வெளிநாடு சென்று படித்து வருவதற்குமாகும். தீண்டாமை சற்றேனும் இல்லாமல் ஒழிய வேண்டுமானால், அறிவூட்டும் பிரசாரமும் அவசியம். எனவே இப்பணியில் ஈடுபட்டுள்ள எண்ணிறந்த ஸ்தாபனங்களுக்கு நமது அரசாங்கம் நிதி கொடுத்து உதவியுள்ளது.

அரசியல் சட்டத்தில் எழுதி வைக்கப்பட்ட உரிமைகளை அமல் நடத்தத் துணிவு வேண்டும். அந்தத் துணிவு நமக்கு உண்டு என்று நமது நாடு எடுத்துக் காட்டி விட்டது. அவ்வுரிமைகளை அமல் நடத்தினால், நாட்டிலே கம்யூனிஸ்டுகளுக்கும் வலுவான அனுதாபம் ஏற்படக் கூடும் என்றிருந்தாலும், கேரள ராஜ்யத்தில் அவர்கள் பெரும்பான்மை பெறும் வாய்ப்பு ஏற்படக் கூடும் என்றிருந்தாலும் நமது நாடு அவ்வுரிமைகளை அமல் நடத்தத் தயங்கவில்லை.

சர்வதேச விவகாரங்களில் கட்சி சேர்வதில்லை என்ற நமது வெளிநாட்டுக் கொள்கையிலும் இந்தியா விட்டுக் கொடுக்காமல் நடந்து வருகிறது. இதுவும் அது தன் சுதந்திரத்தின் பொருட்டுக் கொடுக்கும் விலையேயாகும். அக்கொள்கையால் நாம் பெற்ற கண்டனமும் கடுமையானது. எங்கிருந்து நமக்கு உதவி தேவையோ, எங்கிருந்து நாம் ஆதரவை விரும்பினோமோ, அங்கிருந்தே இக் கண்டனமும் கிடைத்தது. ஆயினும், இந்தியா இந்த ஆதரவைக்காட்டிலும் தனது சுதந்திரத்தையே உயர்வாக மதித்தது. அதற்கு வேண்டிய விலையையும் கொடுத்தது. கட்சி சேர்வதில்லை, சர்வதேசக் கூட்டுச் சேர்வதில்லை, ராணுவ ஒப்பந்த ஏற்பாடுகளில் சேர்வதில்லை என்ற நமது நிலையை மற்றவர்கள் மென்மேலும் சரியாய் உணரத்தலைப்பட்டுள்ளார்கள் என்று தெரிகிறது; இது குறித்து மகிழ்ச்சி.

நிலையான நெறிகள் பற்றித் தீவிரமாகச் சிந்திப்பதற்கு பிரதம மந்திரி நேருவே ஒரு முன் மாதிரியாக விளங்குகிறார். அவர் டிசம்பர் மாதம் டில்லி பல்கலைக் கழகத்தில் பேசியபோது, "இன்று நமக்கு நிலையான நெறிகள் என்ன உள்ளன?" என்று கேட்டுப் பின்னர் இவ்வாறு சொன்னார்: "அவை (நிலையான நெறிகள்) இல்லையானால், நாம் நுனிப் புல் மேய்பவர்களாக, சாரமற்றவர்களாகப் போவோம். சாரமற்ற செயல்களால் மக்களும் நாடுகளும் வளர்ச்சியடைவதில்லை".

காந்தியின் ஆன்மீக வாரிசு என்று கூறப்படும் வினோபா பாவே நாட்டில் மலர்ந்துள்ள ஆன்மீக மேதா விலாசத்துக்கோர் உதாரணமாவார். இம்மேதாவிலாசம் மலர்வதற்குக்காரணம் அதற்கு வழங்கப்பட்டிருக்கும் சுதந்திரமும் ஊக்கமுமாகும். நிலமில்லாதவர்க்கு வழங்குவதற்காக நிலம் கொடுங்கள் என்று வினோபா பாவே ஊர் ஊராகச் சென்று 65,000 மைலுக்கும் மேலாகச் சுற்றியுள்ளார். அவர் இதுவரை பத்து லட்சம் ஏக்கருக்கு மேல் பெற்றுள்ளார். அவருடைய கொள்கை மிகத் துணிச்சலானது; அவரும் தன்னை வெறுத்தவர். இவையெல்லாம் அவருக்கொரு மாபெரும் மாண்

(8-ம் பக்கம் பார்க்க)



## அமுத வாக்கு

நமக்கு முடியாத காரியத்தைக் கைவிடலாகாது. நம்மைவிட திறமையுள்ள ஒருவன் கையிலே கொடுத்து அவன் கீழே சிற்றாளாயிருந்து தொழில் பழகிக்கொண்டு, பிறகு நாமாகச் செய்ய வேண்டும்.



ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஒலி 24] 22-3-1959 [வாரம் 15

தேர்தல்கள் இப்பொழுதெல்லாம் ஜனங்களுக்குப் பழக்கம் ஆகிவிட்டடன. வார்டுகள் தோறும் தெருக்கள் தோறும் பந்தரிட்டு கொடிகள் கட்டி, அறிக்கைகள், சுவரொட்டுகள், ஒலிபெருக்கிகள் ஒரே திருவிழா மயமாகிக் கொண்டிருக்கின்றது. சட்டசபைத் தேர்தலுக்கும் சாதாரண பஞ்சாயத்துத் தேர்தலுக்கும் செலவிலும், ஆரவாரத்திலும், பிரசார முறையிலும் வேறுபாடில்லாமல் போய்விட்டது. தாராளப் பணப்புழக்கத்திற்கும் எல்லைகடந்து போய்க் கொண்டிருக்கிறது.

தேர்தல் அடிக்கடி வர ஆரம்பிக்கவும் இதை எதிர் பார்த்து, இதை ஒரு கலையாகப் பயிலவும், இவற்றில் சாமர்த்தியங்களைக் காட்டவும் ஆவலுடன் காத்திருப்பவர்களின் கோஷ்டியும் தோன்றுவது இயல்புதான்.

ஜனநாயகத்தின் நன்மைகளை நாம் அனுபவிப்பதற்கு முன்னால் அதன் தீமைகள் பலவற்றைச் சமாளிக்கவேண்டிய சங்கடமும் இருக்கிறது. தேர்தல்கள் என்றவுடன் தனிப்பட்டவர்களின் பதவிவேட்டைக்கான போர்க்களம் என்ற நிலைமை வளர்ந்துகொண்டே போவது ஜனநாயகத்தின் வெற்றிக்கு வழியல்ல. தேர்தல்கள் மக்களின் உண்மையான கருத்தை மாசு மருவில்லாமல் எடுத்துக்காட்டும் ஒரு அரிய சந்தர்ப்பம் என்று நிலை நம் நாட்டில் வளர வேண்டும். இல்லாவிட்டால் ஜனநாயகம் என்பது பேச்சளவில் இருந்து திடீரென்று ஒரு நாள் மறைந்து விடும்.

நமது நாட்டில் ஜனநாயகத்தை உண்டாக்கி மக்களின் புது வாழ்வுக்கு வழி தேடிய மகத்தான ஸ்தாபனம் காங்கிரஸ். அந்த ஸ்தாபனத்தின் பால் இன்று நாட்டு நிர்வாகம் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது. பல நூற்றாண்டுகள் அடிமைப் பட்டிருந்த ஒரு நாட்டில் புதிய வாழ்வு தோற்றுவிக்கும் பெரும் பொறுப்பை ஏற்றுக்கொண்டுள்ள தேசீய மகா சபையான காங்கிரஸுக்குமக்கள் தங்கள் முழு ஆதரவைக் காட்டவேண்டியது கடமையாகும்.

விரிந்த அளவில் தேசத் தலைமைதான் காங்கிரஸுக்குக் கொடுத்திருக்கிறோமே, ஒரு நகரில், ஒரு தெருவில் ஒரு சிறிய பதவியை மாற்றுக் கட்சியாருக்கோ, தனிப்பட்டவர்க்கோ போனால் போகிறதென்று கொடுத்து விட்டால் என்ன பிசகு என்று எண்ணிவிடக்கூடாது.

நகரசபைத் தேர்தல் அப்படி ஒன்றும் சாதாரண தனி நபர் விவகாரமல்ல. இவை காங்கிரஸ் ஆட்சியின் பால் மக்கள் கொண்டுள்ள அசைக்க முடியாத நம்பிக்கையை உறுதிப் படுத்தும் பரிசோதனைகளே. எனவே நகரின் நன்மையைக்கருதியும் சரி, நாட்டின் பொது நன்மையைக் கருதியும் சரி, காங்கிரஸுக்குத் தங்கள் முழு ஆதரவை இந்தத் தேர்தல்களில் தெரிவிக்க வேண்டியது மிகவும் அவசியமாகும்.

நகரங்களில் படித்த கல்விமான்கள் நிறைந்திருக்கிறார்கள். ஜனநாயக ஆட்சியில் ஒரு தேசீய ஸ்தாபனத்தின் கைகளைப் பலப்படுத்துவது தேசீய—அகில உலக அடிப்படையில் எவ்வளவு முக்கியம் என்பதை உணர்வார்கள்.

திருச்சி மக்கள் நகரசபைத் தேர்தலில் காங்கிரஸுக்கு வெற்றியளிப்பார்களென்று நம்புகிறோம். அளிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

---

## செய்திக் கோவை

திருச்சி ஜில்லாவில் அநேக சிறு தொழில்களைத் துவக்கி வசதிகளை உபயோகித்து, வேலையின்மையைப் போக்குமாறு சென்னை சிறுதொழில் சேவை இன்ஸ்டிடியூட் டிபுடி டைரக்டர் திரு எஸ். வி. எஸ். சர்மா 13—3—59 மாலை காமராஜ் மன்றத்தில் பேசுகையில், தொழிலதிபர்களை வேண்டிக்கொண்டார். ஜில்லாக் கலெக்டர் திரு குலாம் மகமது பாஷா இக்கூட்டத்திற்கு தலைமை வகித்துப்பேசினார். சிறுதொழில் நிர்வாகப் பயிற்சி திரு சி. ஆர். வேணுகோபால், கீதாச்சார் ஆகியோர் பயிற்சிபற்றிப் பேசினர். திரு ஆர். ரத்தினம் வந்தனோபசாரம் கூறினார்.

∴ ∴ ∴

சென்னை ராஜ்ய லாரி சொந்தக்காரர்கள் சங்கத்தின் திருச்சி கிளை காரியதரிசி திரு டி. எஸ். மணியன் பின்வருமாறு 13-3-59 அன்று தெரிவித்தார் :—1959 மார்ச் 5-ந்தேதி கூடிய லாரி சொந்தக்காரர்கள் கூட்டத்தில் இரவு வேளைகளில் லாரிகள் போகலாகாதென்று சர்க்கார் விதித்துள்ள தடையை நீக்கினாலல்லாது 1959 எப்ரல் 1-ந்தேதி முதல் "வரிகொடா இயக்கம்" நடத்துவது என்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அத்துடன் சமீபத்தில் டீசல் எண்ணெய், டயர் முதலியவை மீது விதிக்கப்பட்ட வரி பற்றி விவாதிக்க லாரி சொந்தக்காரர்கள் மகாநாட்டைக் கூட்டுவதென்றும் தீர்மானிக்கப் பட்டது.

∴ ∴ ∴

திருப்பளாத்துறை விவேகாநந்தக் கல்லூரி சமூக சேவா சங்கத்தின் இறுதிநிலைப் பிரசங்கத்தில் அர்ச். சூசையப்பர் கல்லூரி சமூக சேவை இன்ஸ்டிடியூட் டைரக்டர் சங். ஜே. அதிசயம் 13--3—59 அன்று கீழ்கண்டவாறு கூறினார் :—வறுமையை வளமையாக மாற்றும் பெரும் பணியில் உபாத்யாயர்கள் மாணவர்களின் தலைவர்களாக சேவை செய்யவேண்டும் என்றார்.

பிரின்ஸிபால் திரு ஆர். கிருஷ்ணன் இக்கூட்டத்திற்கு தலைமை வகித்தார். திரு ஐ. அருணாசலம் அனைவரையும் வரவேற்றார். சங்க காரியதரிசி திரு ஞானதிக்கம் ஆண்டறிக்கை சமர்ப்பித்தார். திரு கோஸாகான் வந்தனோபசாரம் கூறினார்.

∴ ∴ ∴

திருச்சி நகரத்தில் குடி தண்ணீர் சப்ளையை அபிவிருத்தி செய்வதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

தண்ணீர் தட்டுப்பாட்டை சமாளிப்பதற்கு ஆற்றின் தென்கரையில் ஏற்கனவே ஒரு குழாய்க் கிணறு அமைக்கப்பட்டு அது செயல்பட்டு வருகிறது. இது நிமிடத்திற்கு 1000 காலன் தண்ணீரைக் கொடுக்கக் கூடியதென்றாலும் தற்போது 500 காலன் அளித்துவருகிறது. மற்றொரு குழாய்க்கிணறு பூர்த்தியடையும் தருவாயிலிருக்கிறது. நகரசபை என்ஜினீயர் திரு ஏ. வி. ஜெயராஜின் முயற்சியினால் 26 அடி ஆழத்தில் இந்தக் குழாய்க் கிணறு அமைக்கப் பட்டுள்ளது. மற்றொரு குழாய்க் கிணறு அமைக்கும் வேலை ஒரு வாரத்தில் ஆரம்பமாகக்கூடும். மேற்படி குழாய்க் கிணற்றிலிருந்து கிடைத்த தண்ணீரை கிண்டிக்கு அனுப்பி சோதனை செய்ததில் குடிப்பதற்கு ஏற்றதே என்று அறியப்பட்டுள்ளது. இதன் விளைவாக நகர தண்ணீர் சப்ளை நிலைமை அபிவிருத்தியடையும் என்று கமிஷனர் திரு முத்துராமலிங்கம் 16—3—59 அன்று கூறினார்.

∴ ∴ ∴

பிரபல தொழில் அதிபரும் திருச்சி கூட்டுறவு வீடுகட்டும் சங்க பழையதலைவருமான காலஞ்சென்ற வி. சேஷசாயின் உருவப் பட திறப்புவிழா திருச்சி தென்-சென்னை மின்சார சப்ளை கார்ப்பரேஷன் ஹாலில் நடந்தது.

விழாவுக்கு பழைய கல்வி அதிகாரி (டைரக்டர், கே. ஆர். வெங்கட்ராமய்யர் தலைமை வகித்தார். சேஷசாயின் உருவப்படத்தைத் திரு கி. ஆ. பெ. விசுவநாதம் திறந்து வைத்துப் பேசினார். வீடுகட்டும் சங்க உபதலைவர் இருதயசாமி ரெட்டியார் எல்லோரையும் வரவேற்றார்.

∴ ∴ ∴

திருச்சி காந்தி மார்க்கெட் மளிகை வியாபாரிகள் சங்க வருடாந்தரப் பொதுக் கூட்டம் திரு. மு. முத்துராமலிங்கம் பிள்ளை தலைமையில் கூடியது. நடைமுதல் ஆண்டிற்கு திரு. தொ. வீர. தொங்கியாபிள்ளை தலைவராகவும், திரு. அ. சுப்ரமணிய பிள்ளை துணைத்தலைவராகவும், திரு. ம. கந்தசாமி பிள்ளை பொருளாளராகவும், அ. பக்கிரி, முனைதீன் முதலியோர் செயலாளர் துணைச் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

∴ ∴ ∴

திருச்சி மலைக்கோட்டை ஆயிரக்கால் மண்டபத்தில் கோவில் நிர்வாக அதிகாரி திரு. எஸ். பரமசிவத்தின் முன்னிலையிலும், உருவட்டி பெரியநாயகி சித்தர் ராக்கப்பஸ்வாமி தன்னுடைய உடைகளை மாற்றிக் கொண்டு வெறுங்கையுடன் ஒரு அறையில் பிரவேசித்த போது அதிசயமொன்று நிகழ்ந்தது. மண்டப அறையில் ஏற்றப்படாத குத்துவிளக்கும், வெறும் தாம்பாளமும் மட்டுமே இருந்தன. ராக்கப்பஸ்வாமி பிரவேசித்து 10 நிமிடம் பூஜை நிகழ்த்தியபின்னர் குத்துவிளக்கு எரியத் தொடங்கியதையும், தாம்பாளத்தில் கற்பூரம் எரியத் தொடங்கியதையும் தாம்பாளத்திற்கு எதிரே நான்கு அங்குல உயரமுள்ள முருக விக்கிரகம் இருப்பதையும் கண்டு மக்கள் வியப்படைந்தனர். ஸ்வாமியாரின் கழுத்தில் மல்லிகை மாலை இருந்தது. வலது கையில் மஞ்சள் துணியால் காப்பு சட்டப்பட்டிருந்தது. உருவட்டி பெரியநாயகியின் உற்சவ ஆரம்பமான படியால் தன் கையில் காப்பு கட்டப்பட்டிருப்பதாக கூறினார். விபூதியை அவர் எல்லோருக்கும் வழங்கினார். வடலூர் ராமலிங்க ஸ்வாமிகளின் வரலாறு பற்றி திருமுருக கிருபானந்த வாரியார் அங்கு சொற்பொழிவு நிகழ்த்திய பிறகு இவ்வதிசயம் நடந்தது.

## கோர்ட் விளம்பரங்கள்

### துறையூர் டி. மு. கோ.

O. P. 10 | 59

மனுதாரர்கள் — மாரியாயியம்மாள்

எதிர் மனுதாரர்கள — சப்பாணிய வேளார் வகையரு

மனுதார் புருஷன் இறந்த மகிழம்பாடி முத்துசாமி வேளார் பாண்டு கடனை வசூல் செய்ய பாத்திய சர்ட்டிபிகேட்டுக்கு மனுக் கொடுத்து விசாரணைக்கு 7-4-59ல் கெடு வைத்திருப்பதால் ஆக்ஷேபணையுள்ளவர்கள் தெரிவித்துக் கொள்ளலாம்.

வி. எஸ். நரசிம்மய்யர்,
அட்வகேட்.

10 | 2876 | 298.

### IN THE COURT OF THE DISTRICT MUNSIF OF ERODE.

O. P. No. 12 of 1959.

In the matter of the debts of S. R. Periana Goundar - deceased.

1. S. R. P. Rajappa. 2. S. R. P. Shanmugham—Petitioners.

Vs

The Salem Erode Electricity Distribution Co., Ltd., by the Engineer in Charge.—Respondent.

Notice is hereby given to all concerned that the petitioners have applied for a succession certificate to enable them to collect the sum of Rs. 600- under account No. 826 of the deceased with the respondent under Part X of the Indian Succession Act of 1925. Persons interested in opposing the application may appear before the above court on 6—4—1959 at 10 A. M. In default the above matter will be decided exparte,

S. Krishnaswami Iyer,
Advocate.

5—2871 | 293

### திருச்சி சப் கோர்ட்டு

S. C. No. 13/1959.

Kumarappa & Co., By sole Prop. Kumarappa Chettiar Mandy, Tanjore Road, Trichy. —Plaintiff.

1. M. A. Rahiman, 2. M. H. Rahiman, Pensionkara Street. Tennur, Trichinopoly — Defendents.

ஷை நெம்பரில் வாதி, பிரதிவாதிகள் பேரில் புரோநோட்டின் படி ரூ. 825-ம் பின் வட்டியும் செலவும் கிடைக்க தாவாசெய்து ஈரங்கி 25-3-1959-ம் தேதிக்கு போடப்பட்டிருக்கிறது. அன்று பிரதிவாதிகள் பகல் 11 மணிக்கு ஷை கோர்ட்டில் ஆஜராகி தங்கள் கட்சிகளை தெரிவித்துக் கொள்ளாவிடில் தாவா Exparte யாக முடிவாகிவிடும்.

S. கஸ்தூரி ரெங்கய்யங்கார்
வாதி வக்கீல்.

3 | 2869 | 291

### விழுப்புரம் டி. மு. கோ.

O. S. 253 | 53

வாதி — விழுப்புரம் முனிசிபல் கவுன்சில் by its commissioner

பிரதிவாதிகள் — 1. ஹமீத்கான் 2. ஹாசன் கான் 3. பிஸ்மில்லா கான்.

ஷை நம்பரில் வாதி பிரதிவாதிகள் பேரில் பெற்றிருக்கும் டிக்ரி கடனுக்காக 1-ம் பிரதிவாதிக்கு பாத்தியமான விழுப்புரம் டி. மு. கோர்ட் S. C. 610/49 டிக்ரியை ஜப்தி செய்யப்பட்டு, மனு ஈரங்கி 31-3-1959 ல் வைத்திருப்பதால் அன்று தினம் சமூகம் கோர்ட்டில் பகல் 10 மணிக்கு ஆக்ஷேபணையிருந்தால் தெரிவித்துக்கொள்ள வேண்டியது. இல்லாவிடில் எக்ஸ்பார்டியாக உத்தரவு செய்யப்பட்டு ஜப்தி ஊர்ஜிதம் செய்யப்படும்.

யு. ஜி. சீனுவாசாச்சாரியார்,
அட்வகேட்.

11 | 2877 | 299.

ருசியுள்ள உணவளிக்க அன்புள்ள தாயார் இருக்கவேண்டும். ஒழுக்க நடத்தைக்கு நல்ல சிநேகிதர்கள் வேண்டும். விஷயம் அறிந்த அறிவு வளர்ச்சிக்கு நல்ல ஆசான் வேண்டும். சுமுகமான இல்வாழ்க்கை நடத்த இங்கிதம் அறிந்த மனைவி வேண்டும். தூய்மையான சிந்தனை ஏற்பட தெய்வ பக்தி இருக்க வேண்டும்.

— உபநிஷத்

(5-ம் பக்கத்தொடர்ச்சி)

பும் செல்வாக்கும் வழங்கியுள்ளன. இனி எதிர் காலத்தில் ஏற்படக் கூடிய எந்த தேசீய நெருக்கடிச் சமயத்திலும் இம் மாண்பும் செல்வாக்கும், நிலைமை ஒரு முடிவுக்கு வருவதற்கு உறுதுணையாய் இருக்கக்கூடும்.

நினைவில் கொள்ளவேண்டியது இது தான். சுதந்திரம் சும்மா கிடைப்பதல்ல. அது பாடுபட்டுப் பெற வேண்டிய ஒன்று. சுதந்திரம் கிடைத்து விட்டால் இனி அது என்றும் இருக்கும் என்று வாளாவிருக்கவும் கூடாது. அது மீண்டும் மீண்டும் பாடுபட்டுப் பேண வேண்டிய ஒன்றாகும். உடம்பு பழக்கத்துக்கு அடிமையாகாமல் தடுக்க வேண்டுமாயினும், மனம் கோட்பாட்டிற்கு அடிமையாகாமல் தடுக்கவேண்டுமாயினும், ஆன்மா அச்சத்துக்கு அடிமையாகாமல் தடுக்க வேண்டுமாயினும் சுதந்திரத்துக்காகப் பாடுபடுவதை நிறுத்தவே முடியாது. இது மனிதனுக்கும் நாடுகளுக்கும் பொருந்தும். விடுதலைக்குக் கொடுக்க வேண்டிய விலை அது.

---

கடவுள் உண்டா இல்லையா? அதுபற்றிக் கவலையில்லை. அருள் தோன்றுமிடம் இருக்குமல்லவா? அதுதான் கடவுள்.

—மறைமலையடிகள்.

---

(4-ம் பக்கத்தொடர்ச்சி)

பார்க்க வாருங்கள். என்னை மணக்க வேண்டும் என்று அவரிடம் கேளுங்கள்" என்கிறாள் இளவரசி. "ஆனால் விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களுக்கு நான் எங்கே போவேன்? நான் ஏழையாயிற்றே" என்கிறான் அலாவுதீன். அவர்களுடைய சம்பாஷணை, அங்கு கேட்கும் பேரிரைச்சலினால் தடைப்படுகிறது. இருட் குகையிலிருந்து ஜோசியரை காவலாளிகள் இழுத்துச் செல்கின்றனர். அப்போது அலாவுதீன், "ஹஸனின் மகன் அலாவுதீன் என்பர் என்னை" என்று இளவரசியிடம் கூறுகிறான். இது ஜோசியரின் காதில் விழுந்ததும், அவரது அழுகையும் கூப்பாடும் நின்று விடுகிறது. மந்திரியை அழைத்துவரும்படி அவன் காவலாளிகளிடம் கூறுகிறான். மந்திரியிடம் அலாவுதீனைச் சுட்டிக் காட்டிவிட்டு, தனக்கு சன்மானம் வழங்க வேண்டும் என்று கோருகிறார். ஜோசியர், அலாவுதீன் இருவரையுமே விடுதலை செய்யுமாறு மந்திரி கட்டளை இடுகிறான்.

## இரண்டாவது அங்கம்:

முதலாவது காட்சி: நள்ளிரவில் மந்திரியும் ஜோசியரும் அலாவுதீனும் பாலைவனத்திலுள்ள ஒரு குகைக்குச் செல்கிறார்கள். குகையின் வாயிலையடைந்ததும், அலாவுதீன் மந்திரச் சொல்லை உச்சரிக்கிறான். குகையின் வாயில் திறக்கிறது. உள்ளே போய் அங்குள்ள எல்லா பொக்கிஷங்களையும் அலாவுதீன் எடுத்துக் கொள்ளலாம் என்று மந்திரி கூறுகிறான். ஆனால் அங்குள்ள ஒரு பித்தளை விளக்கை மட்டும் தன்னிடம் கொடுக்க வேண்டும் என்கிறான்.

இரண்டாவது காட்சி: குகைக்குள் அலாவுதீன் விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களையும் தங்க உடைவாள் ஒன்றையும் ஒரு பாத்திரம் நிறைய நவரத்தினங்களையும் தனக்காக எடுத்துக்கொள்கிறான். மந்திரிக்காக அங்கிருந்த பித்தளை விளக்கையும் எடுத்துக் கொள்கிறான்.

மூன்றாவது காட்சி: ஜோசியரை மந்திரி விரட்டி விடுகிறான், அவரால் மந்திரிக்கு இனி ஒரு பிரயோசனமும் இல்லாத காரணத்தால்! அலாவுதீன் குகையிலிருந்து வெளியே வந்ததும், உருவிய உடைவாளுடன் மந்திரி பாய்ந்து அவனைக் கொல்ல முயலுகிறான். ஆனால் அத்தருணம் குகையின் பாறைக் கதவுகள் மூடிக் கொள்ளுகின்றன. அந்தக் கதவுகளுக்கு நடுவில் மந்திரியின் வாள் மாட்டிக்கொள்வதால், அலாவுதீனின் உயிர் தப்புகிறது. மந்திரியின் சதியைப் புரிந்துகொண்ட அலாவுதீன், விளக்கை அவரிடம் தர மறுக்கிறான்.

நான்காவது காட்சி: அலாவுதீன் தனது தாயாரை சுல்தானிடம் அனுப்பி இளவரசி பதூரைத் தனக்கு மணம் செய்விக்க வேண்டும் என்று கோரச் செய்கிறான். சுல்தானுக்கு வெகுமதியாக அவன் கொண்டு வந்திருந்த நவரத்தினக் கற்களைக் கொடுத்தனுப்புகிறான். தாயாரும் மகன் விருப்பப்படி அரண்மனைக்குச் செல்கிறாள்.

ஐந்தாவது காட்சி: சுல்தான் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கிறார். அவரைச் சுற்றி பிரபுக்களும் பிரதானிகளும் அமர்ந்துள்ளனர். அரசர்முன் விசாரணைக்கு வந்துள்ள தகராறுகளைத் தீர்த்துவைக்க அரண்மனை அறிஞர்கள் யோசனை கூறிக்கொண்டிருக்கின்றனர். மந்திரியார் ஒரு சுவர்ண மாளிகை எழுப்பும் பொருட்டு மீனவர்களிடமிருந்தும் தண்ணீர் பீப்பாய்க்காரர்களிடமிருந்தும் கட்டணமாக தங்கம் வேண்டும் என்று கோருவதாக அரசர்முன் பலர் முறையிடுகிறார்கள். ஆனால் மந்திரியார், அவர்களுடைய பேச்சை நம்ப வேண்டாம் என்றும், அவர்களை வெளியே தள்ள வேண்டும் என்றும் சுல்தானுக்கு ஆலோசனை கூறுகிறார். அப்போது அலாவுதீனுடைய தாயார் அரசர்முன் வந்துநின்று, இளவரசியைத் தனது மகனுக்கு மணம் முடிக்க வேண்டும் என்று கேட்கிறார். அரச அவையிலிருக்கும் எல்லோரும் குலுங்கக் குலுங்கச் சிரிக்கின்றனர். ஆனால் அந்த அம்மையார் தன்னிடமுள்ள நவரத்னக் கற்களை மன்னனிடம் காட்டுகிறார். இவ்வளவு செல்வமுடைய இளைஞன் இளவரசிக்கு ஏற்றவனே என்று சுல்தான் முடிவு செய்கிறார். சூழ்ச்சிக்கார மந்திரி, "சுவர்ண மாளிகை கட்டித்தர வேண்டும் என்று இளவரசியார் கோரியிருக்கிறாரே!" என்று குத்திக்காட்டுகிறான். இளவரசி பதூர் அரச அவைக்கு ஓடி வருகிறாள். அலாவுதீன் தனக்கு சுவர்ண மாளிகை கட்டித்தர வேண்டும் என்பது அவசியமில்லை என்று கூறுகிறாள். ஆனால் சுல்தான் இந்த நிபந்தனையைக் கைவிட மறுக்கிறார்.

ஆறாவது காட்சி: இளவரசியை மணக்கும் எண்ணத்தை விட்டுவிடும்படி அலாவுதீனுடைய தாயார் மகனுக்கு புத்திமதி கூறுகிறாள். "சுவர்ண மாளிகையைக் கட்டுவது எப்படி உன்னால் முடியும்?" என்று கேட்கிறாள். "குகையிலிருந்து அலாவுதீன் கொண்டுவந்த எல்லா நவரத்னக் கற்களையும் சுல்தானிடம் கொடுத்துவிட்டோம். இப்பொழுது நமது சாப்பாட்டிற்கே திண்டாட்டமாக உள்ளதே" என்று புலம்புகிறாள். அலாவுதீனுக்கு, குகையிலிருந்து அவன் கொண்டு வந்திருந்த விளக்கு ஞாபகத்திற்கு வருகிறது. அதை விற்றால் கொஞ்சம் பணம் கிடைக்கும். ஆனால் அது மிகவும் பழைய விளக்கு – ஒளியிழந்து கருத்துப் போய் இருந்தது. யாரும் அதை விலை கொடுத்து வாங்க முன்வர மாட்டார்கள். மண்ணைப்போட்டுத் துலக்கினால் விளக்கின் பழைய மினு மினுப்பு வரக்கூடும் அல்லவா? மண்ணால் விளக்கைத்

(10-ம் பக்கம் பார்க்க)

# தெரிந்துகொள்வீர்

மின்சார விசையால் ஓடக்கூடிய மோட்டார் காரை, ஓர் பிரிட்டிஷ் ஸ்தாபனம் தயாரித்திருக்கிறது. 'டெல்' என்று பெயரிடப்பட்ட இந்த மோட்டார் பின் பக்க இருசில் பொருத்தப்பட்ட பாட்டரிகளிலிருந்து கிடைக்கும் விசையால், மோட்டார் இயங்குகிறது. விசேஷ அமைப்புள்ள இந்த பாட்டரிகளை, வீட்டிலுள்ள ஏ. ஸி. மின்சாரக்கம்பியில் இணைத்து, சில மணி நேரத்தில் விசையூட்ட (ரீ — சார்ஜ்) முடியும்.

சில மாதங்களுக்குள், விற்பனைக்காக உற்பத்தியைத் தொடங்க திட்டமிட்டிருக்கிறார்கள். முதல் நிலையில் வாரத்திற்கு 50 கார்கள் வீதம் தயாரிக்க ஏற்பாடு செய்து வருகிறார்கள்.

∴ ∴ ∴

பிரிட்டிஷ் ஸ்கூட்டர்கள் மணிக்கு சுமார் அறுபது மைல்கள் வேகத்தில் ஓடக்கூடியவை. சாதாரணமாக ஒரு காலன் பெற்றோலில் சுமார் 120 மைல்கள் செல்லமுடியும்.

∴ ∴ ∴

நோயாளிகளுக்கு, வைத்தியசாலைகளில் இடம் தேடித் தருவதற்காக, லண்டன் பிரிட்ஜ் ஸ்டேஷனுக்கருகில் டெலிபோன் தகவல் நிலையமொன்றை நிறுவியிருக்கிறார்கள். குளிர் காலத்தில், முதியவர்கள் நோய்வாய்ப்படுவது இயல்பு. அதனால் வைத்தியசாலைகளில் இட நெருக்கடி ஏற்படுவதுண்டு. எந்த வைத்தியசாலையில் படுக்கை காலியாகயிருக்கிறது என்று தேடிப்பிடித்து, நோயாளியை அனுப்பி வைக்க பல டாக்டர்களுக்கு அவகாசம் இருப்பதில்லை. புதிய டெலிபோன் நிலையத்தால், இந்தப் பணி எளிதாகி விட்டது.

லண்டனிலுள்ள வைத்தியசாலைகளுடன் தொடர்பு கொண்டு, அவ்வப்போது காலியாகும் படுக்கைகளைப் பற்றிய தகவல்களைத் தொகுக்க எட்டுப்பேர் பணியாற்றக்கூடிய மேஜை ஒன்று இங்கு உண்டு. புதிய நோயாளியை வைத்தியசாலையில் சேர்க்க இடம் தேடும்போது, டெலிபோன் பெண், அந்த நோயாளி வசிக்குமிடத்திற்கு அருகிலுள்ள எந்த வைத்தியசாலையில் இடம் இருக்கிறது என்பதை தெரிவிப்பதுடன், அந்த வைத்தியசாலைக்கு அறிவித்து ஆம்புலன்ஸ் வண்டியை அனுப்பி, நோயாளியை எடுத்துச் செல்லுமாறு கூறுவாள்.

∴ ∴ ∴

சென்ற மாதம் லண்டன் ஏர்ல்ஸ் கோர்ட்டில் தொடங்கிய ஜவுளிக் காட்சியில், விரிப்புகள் பகுதியிலிருந்த இந்திய சமுக்காளங்களைக் கண்டு பலர் வியந்தனர். பிரிட்டனில், ரப்பர் அணைப்புள்ள நைலான் விரிப்புகள் பிரபலமாகி வரும் இந்நாளில், இந்தியாவில் தயாராகும் விரிப்பு சமுக்காளங்கள் பலருடைய கவனத்தை ஈர்த்தது குறிப்பிடத்தக்கது இதனால் இந்தியாவில் தயாராகும் விரிப்பு சமுக்காளங்களுக்கும், ரத்தின கம்பளங்களுக்கும் எதிர் காலத்தில் நல்ல கிராக்கி இருக்கும் என்று ஊகிக்க இடமிருக்கிறது.

∴ ∴ ∴

எண்ணெய்க் குழாய்களைத் துப்புரவாக வைத்துக் கொள்வதற்கு பெரிய எண்ணெய்க் கம்பெனிகளின் இஞ்சினீயர்கள் ஒரு முறையைக் கையாளத் திட்டமிட்டுள்ளனர். கற்கண்டுகளைக் குழாய்க்குள் செலுத்தவேண்டும் என்பது அவர்களது திட்டம், அந்த கற்கண்டுகள் குழாய்களைச சுத்தஞ்செய்து விடும்.

∴ ∴ ∴

வாஷிங்டனிலுள்ள ஸிமித்ஸோனியன் நிலையத்தில் மிகப் பெரிய யானை ஒன்று நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. 1955ல் அங்கோலாவில் சுட்டுக்கொல்லப்பட்ட யானை அது. அதன் தோலுக்குள் அடைக்க வேண்டியவற்றை அடைத்து அதை நிறுத்துவதற்கு இரண்டு ஆண்டுகள் ஆயின. அதுவே இதுவரை நமக்குத்தெரிந்துள்ள மிகப்பெரிய யானை. அதன் எடை சுமார் 12 டன் இருக்கிறது; உயரம் 13 அடி இருக்கிறது.

∴ ∴ ∴

நெடுஞ் சாலைகளில் காரில் போகும்போது, வழியில் கிடக்கும் பொருள்கள் பற்றி கார் ஓட்டுகிற ஆளுக்கு முன் எச்சரிக்கை செய்யும் ராடார் சாதனம் ஒன்றை அமெரிக்கக் கம்பெனி செய்துள்ளது. அந்த சாதனம் சோதனை பார்ப்பதற்காகச் செய்யப்பட்டுள்ள ஒரு காரின் முன் புறத்தில் பொருத்தப்பட்டுள்ளது. அந்தக் கருவி ஒலியின் மூலமாகவும் ஒளியின் மூலமாகவும் எச்சரிக்கை செய்யும்.

∴ ∴ ∴

(8 பக்கத்தொடர்ச்சி)

தேய்க்கிறான், அலாவுதீன். ஒரு பிரம்மாண்டமான பயங்கர பூதம் வெளிப்படுகிறது. "இந்த விளக்கின் அடிமை நான். இதை வைத்திருப்பவரே எனது எஜமான். எஜமானே, உங்கள் கட்டளை என்னவோ?" என்று வினவுகிறது பூதம். காலை விடிவதற்குள் ஒரு சுவர்ண மாளிகையைத் தனக்குக் கட்டித்தர வேண்டும் என்று அலாவுதீன் கட்டளையிடுகிறான். அதன்படியே அங்கு ஒரு சுவர்ண மாளிகை தோன்றுகிறது. சுல்தானும் மந்திரியும் பதூரும் இம்மாளிகையைக் கண்டு, பிரமித்துப்போய் விடுகின்றனர். தனது மகளை அலாவுதீனுக்கு மணம் செய்விக்க சுல்தான் இணங்குகிறார். ஆனால் மந்திரி தனது சூழ்ச்சிகளைக் கைவிட மறுக்கிறான். ஜோசியரைத் தனியாக அழைத்து, அலாவுதீனிடமிருந்து அதிசய விளக்கை எப்படியாவது கைப்பற்றுவதற்கு ஒரு வழி காணும்படி கட்டளையிடுகிறான்.

## மூன்றாவது அங்கம்

முதலாவது காட்சி: பல நாட்கள் கழிந்தன. அலாவுதீனும் பதூரும் தமது தங்க மாளிகையிலே இனிது வாழ்ந்து வருகின்றனர். ஜோசியர் அங்கு வந்து, அலாவுதீனை வேட்டையாடச் செல்வதற்கு மந்திரி அழைப்பதாகக் கூறுகிறார். மந்திரி, அலாவுதீனுக்கு அன்பளிப்பாக ஒரு வேட்டைப் பருந்தையும் குதிரையையும் அனுப்பியிருந்தான். வேட்டைக்குப் போக வேண்டாம் என்று பதூர் அவனை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறாள். மந்திரியின் மீது அவளுக்குச் சந்தேகம். ஆனால் போகத் தான் வேண்டும் என்று அலாவுதீன் உறுதியாக நிற்கிறான். வேட்டைக்குக் கிளம்புவதற்கு முன் அலாவுதீன் தனது தாயாரை அழைத்து, விளக்கைப் பத்திரமாகப் பாதுகாக்கும்படி சொல்லிவிட்டுப் போகிறான். அவனுடைய தாயார், அந்த விளக்கை தலையணையின் கீழ் வைத்துக் கொண்டு ஓய்வாக படுத்துக் கொள்கிறாள். பதூருக்குப் பொழுதே போகவில்லை. ஏதாவது கதை சொல்லுமாறு மாமியாரைக் கேட்கிறாள். அதற்குள் மாமியார் ஆழ்ந்த நித்திரையில் ஆழ்ந்துவிடுகிறாள். தெருவிலே பழைய விளக்குகளுக்குப் பதில் புதிய விளக்குகள் தருவதாக தலையில் கூடையுடன் ஒருவன் கூவிக் கொண்டு போகிறான். பதூருக்கு இது கேட்கிறது. உடனே மாமியாரின் தலையணையின் கீழிருந்த விளக்கை எடுத்துக் கொண்டு அவள் ஆர்வமுடன் தெருவுக்கு ஓடுகிறாள். அந்தக் கூடைக்காரன் மாறுவேடத்தில் வந்துள்ள மந்திரியேயாகும். பதூர் கொடுத்த விளக்கிற்குப் பிரதியாக அவன் பள பள என்று மின்னும் ஒரு டசன் விளக்குகளைத் தருகிறான். மாமியார் எழுந்து கொள்கிறாள். நடந்த விஷயம் தெரிந்ததும் அவள் மார்பில் அடித்துக் கொண்டு, "எல்லாம் போய்விட்டதே!" என்று புலம்புகிறாள்.

இரண்டாவது காட்சி: மந்திரி வெற்றிக் கூத்து ஆடுகிறான். இப்பொழுது அதிசயவிளக்கு அவனது கையில்! ஜோசியர் தனக்குச் சேரவேண்டிய வெகுமதியைக் கோருகிறார். ஆனால் மந்திரி அவரை விரட்டியடிக்கிறான்.

மந்திரி அதிசய விளக்கின் உதவியால் பூதத்தை வரவழைத்து இளவரசி பதூருடன் அலாவுதீனின் சுவர்ண மாளிகையை மக்கிரிப் பாலைவனத்திற்கு மாற்றும்படி ஏவுகிறான். மாளிகை மறைந்துவிடுகிறது. இதைக்கண்ட சுல்தான் பயந்துபோய் ஓடி வருகிறார். அலாவுதீன் சூனியக்காரன் என்று மந்திரி குற்றம் சாட்டுகிறான். அலாவுதீனைப் பிடித்து வந்து உடனே சிரச்சேதம் செய்யவேண்டும் என்று அவர் சுல்தானுக்கு யோசனை கூறுகிறார். அலாவுதீன் வேட்டையாடித் திரும்பியதும், காவலாளிகள் அவனைப் பிடித்துக் கொள்கிறார்கள்.

மூன்றாவது காட்சி: அலாவுதீன் காவலாளியிடமிருந்து திமிறிக்கொண்டு விடுபடுகிறான். பிறகு காவலாளிகளுடன் போரிட்டு அவர்களை வீழ்த்துகிறான். அப்போது ஜோசியர் அங்கு வருகிறார். மந்திரியின் மீது ஜோசியருக்கு சொல்லமுடியாத கோபம். நடந்த விவரங்களை எல்லாம் அவர் அலாவுதீனிடம் கூறுகிறார். பிறகு அலாவுதீன் பதூரைத் தேடிச் செல்கிறான்.

நான்காவது காட்சி: சூரியன் தக தக என்று தகிக்கும் பாலைவனம். அங்கு ஒரு சிங்கம் வருகிறது. மனிதர்கள் வரும் அரவம் கேட்கவே ஒளிந்து கொள்கிறது. அலாவுதீன், ஜோசியருடன் ஒரு ஒட்டகத்தின் மீது அவ்வழியாகச்செல்கிறான். ஜோசியர், அலாவுதீனை மக்கிரிப்பாலைவனத்திற்குக் கொண்டுவிடுகிறார். அலாவுதீன் தொடர்ந்து ஒட்டகத்தின் மீது செல்கிறான். தக்க சமயத்தில் அலாவுதீனைக்கொன்றுவிட்டு அதிசய விளக்கைக் கைப்பற்றுவதற்கு ஜோசியர் திட்டமிடுகிறார். இவ்வாறு அவர் சூழ்ச்சி செய்து கொண்டிருக்கும் போது, சிங்கம் அவர்மீது பாய்ந்து அவரை அடித்துத் தின்றுவிடுகிறது.

ஐந்தாவது காட்சி: மக்கிரிப் பாலைவனத்தில் சுவர்ண மாளிகையில், பதூரை பலவந்தம் செய்ய முயற்சிக்கிறான், மந்திரி. "அலாவுதீன் இறந்துவிட்டான்; அவனது உடலைக் கழுகுகள் கொத்தித் தின்றுவிட்டன" என்கிறான். பதூர் பிடிகொடுக்காமல் உறுதியாக மறுக்கிறாள். கோபமடைந்த மந்திரி, பூதத்தை வரவழைத்து, இளவரசியை நாயாக மாற்ற முற்படுகிறார். ஆனால் இத் தருணத்தில் அலாவுதீன் தோன்றி, மந்திரியை வெட்டி வீழ்த்துகிறான். பிறகு மக்கிரிப் பாலைவனத்தை, தனது மனைவி பதூரைப் போன்ற எழில் மிக்க பூங்காவனமாக மாற்றுமாறு பூதத்திற்கு அவன் கட்டளையிடுகிறான்.

---

(2-ம் பக்கத்தொடர்ச்சி)

ளவு பேரையும் உடனடியாகத் திரட்டி வேலையில் ஈடுபடுத்திப் பயனடையலாம் என்று கணக்கிடுவது சரியாகாது. சிரமதானம் என்பது உன்னதமானதொரு கருத்துதான். ஆயினும், ஊதியமெதுவுமில்லாது மேற்கொள்ளப்படும் உழைப்புச் சக்தியை பெரிய திட்டகாரியங்களுக்குப் பெருமளவுக்கு நம்பியிருக்க முடியாது. ஏனெனில், மூன்றாவது திட்டத்திலும் அதையடுத்த திட்டங்களிலும் பெருமளவு தேவைப்படும் முதலீட்டுக்கான முயற்சி, நம்முடைய தற்போதைய நிலைமையில் சாத்தியமானதல்ல. சீனாவில் கூட—சென்ற மூன்று ஆண்டு காலத்தில் கூட்டுறவுப் பண்ணைகளும், சமுதாயப் பண்ணைகளும் வரும்வழை-முதலீட்டுத் திட்டங்களில் ஈடுபடுத்தப்பட்ட உழைப்புச் சக்தியில் பெரும்பகுதி ஊதியமளிக்கப்பட்டு வந்த உழைப்புச் சக்தியேயாகும்.

பூரணமாக வேலையில் ஈடுபடுத்தப்படாத ஆள் பலத்தை சக்தி வாய்ந்ததொரு ஆதாரமாக நாம் கருதுகையில், அத்தகைய உழைப்புச் சக்திக்கு அளித்து வருவதற்கான நியாயமான ஊதியத்தைத் திரட்டுவதற்காகவுள்ள ஆதாரங்களையும் ஒருங்கே கருதிவரவேண்டும். இப்பிரச்னைக்கு நாம் இதுவரை போதிய கவனம் செலுத்தவில்லை. எனவே முதலாவது, இரண்டாவது திட்டங்களில், இந்த உழைப்புச் சக்தியை திரட்டிக்கொள்ளும் கருத்து வெறும் ஆசைக் கூற்றாகவும், வாய்ப்பு பற்றிய வாசகமாகவும் இருந்து வந்ததே தவிர காரிய சாத்தியமான செயல் திட்டமாக இருந்து வரவில்லை.

நம்முடைய தற்போதைய அரசியல், சமூக அமைப்பின் வரம்புக்குள், பிரஸ்தாப காரியத்துக்கும், இதரகாரியங்களுக்கும் திரட்டிக்கொள்ளக்கூடிய ஆதாரங்கள் எவை? எப்போதுமிருந்துவரும் ஆதாரங்களைத் தவிரப் புதிதாக ஆதாரங்கள் எதுவும் இல்லை. ஆனால் அவற்றைத் திரட்டிக் கொள்வதற்கான புதிய, சிறந்த வழிவகைகளை நாம் ஆராயவேண்டும்.

சர்க்காருக்கு வரி விதிப்பின் மூலம் கிடைக்கும் வருமானங்களையும், அதற்கு யார் யார் எவ்வளவு செலுத்துகின்றனர் என்பதையும் கவனிக்கும்போது இரண்டு விஷயங்கள் புலனாகும். (1) மொத்த தேசீய உற்பத்தியில் 70 சதவிகிதம் அளித்து வரும். கிராமப் பகுதி மொத்த வரியில் 40 சதவிகிதத்துக்கும் குறைவாகச் செலுத்திவருகிறது.

இரண்டாவதாக மொத்த வருமானத்தில் வரியாகச் செலுத்தப்படும் தொகையின் விகிதாச்சாரம், கீழ்ப்படியிலிருந்து மேல்படி வரையில் சிறிது சிறிதாகவேதான் அதிகரித்து வருகிறது.

எனவே அபிவிருத்திக் காரியங்களுக்கான அதிகப்படி ஆதாரங்களைத் திரட்டுவதற்கானதொரு திட்டத்தில், மொத்தவருமானத்தில் கிராமப் பகுதிக்கான பங்கை அதிகப்படுத்துவது மட்டிலுமின்றி, அதிக வருமானமுள்ள தொகுதிகளுக்கு அதிக வரி விதிக்கிற விகிதாசாரம் சரியானபடி அமையும்படி செய்வதையும் முக்கிய நோக்காகக் கொள்ள வேண்டும்.

ஐந்து எக்கருக்குமேல் விஸ்தீர்ணமுள்ள நில உடமைகளுக்கு வரி விதிப்பை இரட்டிப்பது. (கிராமங்களில் நான்கில் மூன்று பங்கினர் ஐந்து எக்கருக்கும் குறைவான நிலத்தையுடையவர்களாகும். அவர்களுடைய நிலத்தின் பங்கு, கிராமங்களில் உள்ள மொத்த நில விஸ்தீரணத்தில் ஆறில் ஒருபங்குக்கும் குறைவாகும். எனவே, இந்த வரி விகிதங்களின் இரட்டிப்பு கிராமமக்களில் நாலில் ஓரிவரையே பாதிப்பதாக இருக்கும்; அதேசமயத்தில் மொத்த நிலப் பிரதேசத்தில் ஆறில் ஐந்து பங்குக்கு மேற்பட்ட நிலங்கள் அவ்விதிப்பின்கீழ் வந்துவிடும்)

விவசாய குத்தகை வருமானத்தின் மீது வரி விதிப்பு, இந்த வரியை மூலஸ்தானத்தில் குத்தகைதாரர்களிடமிருந்தே வசூலித்துவிடலாம்; ஆனுல் இறுதியில் அந்த வரி விதிப்பு குத்தகை வருமானம் பெறுவோர்களையே பாதிப்பதாக இருக்கும். அதன் விகிதம், குத்தகைகாரர்களின் மொத்த உற்பத்தியில் பத்தில் ஒரு பங்காக இருக்கலாம். (சாகுபடி நிலங்களில் கிட்டதட்ட பாதி நிலங்கள் ஏதாவதொரு வகையில் குத்தகை ஏற்பாட்டின் கீழ் இருந்து வருகின்றன. இந்த நிலங்களுங்கு சுமார் 600 கோடி ரூபாய் குத்தகையாகச் செலுத்தப்பட்டுவருமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. குத்தகைக் காரர்கள் செலுத்தும் குத்தகையின் சுமையைக் குறைப்பதற்காக ஒரு பக்கம் நிலச்சீர்திருத்தங்கள் செய்யப்பட்டுவருகையிலேயே, நிலச்சொந்தக்காரர்களுக்கு இப்பொழுது செலுத்தப்பட்டு வரும் குத்தகையில் குறைந்தபட்சம் ஆறில் ஒரு பகுதி சர்க்காரின் கையில் வந்து சேரும் வகையில் திரட்டுவது நமது நோக்கமாக இருக்க வேண்டும்.)

இவையாவும், பொதுவான கருத்துக்களேயாகும். அவற்றை கவனமான பரிசீலனைக்குப் பின்னர், ஏற்றவாறு மாற்றிக்கொள்ளலாம். ஆயினும், கிராமப்பகுதியும் அதிக வருமானப் பிரிவுகளுக்கு அதிக வரி விகிதம் இருக்கும்படி படிப்படியாக அதிகப்படுத்துவதற்கான நடவடிக்கைகளை வகுத்துவர முடியும் என்பதில் சற்றேனும் ஐயமில்லை. இதைத் திறனுடன் மேற்கொண்டுவந்தால், கிராமப் பகுதியிலிருந்து தற்போது கிடைத்துவரும் வரி வருமானத்தை இரட்டிக்கலாம். (அதாவது ஆண்டொன்றுக்குச் சுமார் 300 கோடி ரூபாய் அதிகமாகக் கிடைக்கும்). இந்த அதிகப்படி வரி வருமானத்தை அபிவிருத்திக் காரியங்களுக்காக கிராமப் பகுதிக்கே திருப்பிவிடலாம். (அதாவது விவசாயம், பாசனம், சிறுதொழில்கள், சுகாதாரம், கல்வி போன்ற துறைகளில் அபிவிருத்திக்கு அதைச் செலவிடலாம்). இந்த ஏற்பாடு உள்நாட்டு ஆதாரங்களிலிருந்து மூன்ருவது திட்டத்துக்குக் கிடைக்கக்கூடிய முதலீட்டு விகிதத்தை கணிசமாக அதிகப்படுத்தி வருவது மட்டிலுமின்றி, வேலையில்லாதிருந்து வரும் தொழிலாளர்களை உற்பத்தி நடவடிக்கைகளில் ஈடுபடுத்திக்கொள்வதற்குப் பெரிதும் உதவிவரும்.

சுமார் 100 கிராமங்கள் கொண்ட கிராமத்தொகுதியொன்றுக்குத் தனிப்பட ஒரு சட்டசபையை ஏற்படுத்தலாம்; அதன் அங்கத்தினர்கள் தேர்தல்மூலம் தேர்ந்தெடுக்கப்படலாம். நேரடியாக நிலத்தின் வாயிலாகக்கிடைக்கும் வருமானம் (நில வரி, குத்தகை வரி, பாசன வரிகள் ஆகியவை) யாவற்றையும் அதனிடம் ஒப்படைத்துவிடலாம்; அதேசமயத்தில் விவசாயத்துறையுடன் சம்பந்தப்பட்டஸ்தல அபிவிருத்தி வேலை நடவடிக்கைகள், சிறுதொழில்கள், சுகாதாரம், கல்வி ஆகியவை சம்பந்தப்பட்ட வேலைப் பொறுப்புகளை எல்லாம் அவற்றிடம் ஒப்படைத்து விடலாம். இந்த ஏற்பாடு, சமுதாய அபிவிருத்திவேலை நடவடிக்கைகள் தற்போதிருந்து வரும் அதிகார ஜபர்தஸ்து சாயையைக் குறைப்பதற்கு உதவுவதுடன், கிராமப்புறங்களில் உண்மையான செயல் ரீதியான ஜனநாயகம் நிலவுவதற்கு வழிகோரி, ஸ்தல அபிவிருத்தி முயற்சிக்கு ஸ்தல ஆதாரங்களை உச்சபட்ச அளவுக்கு திரட்டுவதற்கும் சாதனமாக அமையும்.

# கோர்ட் விளம்பரங்கள்

## கள்ளக்குறிச்சி டி. மு. கோ.

S. C. 24/59.

வாதி: சாரங்கபாணி முதலியார்
பிரதிவாதி: பனப்பாடி ஆறுமுகம்

வாதி பிரதிவாதி பேரில் புரோநோட்டுப்படி ரூ. 181–37 nP-க்கு தாவா செய்திருக்கிறபடியால் 2–4–1959 ல் நேரிலாவது வக்கீல் மூலமாவது ஆஜராகி ஆட்சேபணை இருந்தால் தெரிவித்துக் கொள்ளவேண்டியது.

எஸ். ராமமூர்த்தி அய்யர்,
அட்வகேட்.

1/2867/289.

## குளித்தலை டி. மு. கோ.

S. C. 1128/58.

வெங்கடாஜலம் பிள்ளை — வாதி.
கே. கோவிந்தசாமி — பிரதிவாதி
பிரதிவாதிக்கு நோடீஸ்:–

வாதி பிரதிவாதி பேரில் ரூ. 84—6—0 கிடைக்க புரோநோட்டின் பேரில் தாவா செய்து ஷை தாவா 31–3–59 உ விசாரணை கெடு வைக்கப்பட்டிருப்பதால், அன்று ஆக்ஷேபணையிருந்தால் தெரிவித்துக் கொள்ளலாம்.

ஆர். பார்த்தசாரதி,
வாதி அட்வகேட்.

2 | 2868 | 290

## மாயவரம் டி. மு. கோ.

S. C. 26 | 59.

எ. வெங்கிட்டருமய்யர் — வாதி
பாலசுப்பிரமணிய அய்யர் — 2-ம் பிரதிவாதி.

ஷை நிர். 2-ம் பிரதிவாதி தெரிவிப்பது என்னவென்றால்

ஷை நிர். வாதியால் உம்முடைய வகையரு பேரில் பிராமிசரி நோட்டுப்படி ரூ. 149–0–0-க்கு தாவா செய்து பப்ளிகேஷனுக்கு உத்திரவாகி 24–3–59 ல் கெடு போடப் பட்டிருக்கிறது. அது விஷயமாய் உமக்கு ஆக்ஷேபணை இருந்தால் ஷை தேதியில் பகல் 10 மணிக்கு கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளவும்.

வி. சுப்பிரமணிய அய்யர்,
அட்வகேட்.

9/2875/297

## சிதம்பரம் டி. மு. கோ

O. P. 17/59.

மனுதாரி:—ராதா லெக்ஷிமி அம்மாள்.

Respondent:—கௌரி அம்மாள் w/o V. நாராயணசாமி படையாச்சி, நக்கந்தங்குடி சிதம்பரம் தாலூகா.

தென்னார்காடு ஜில்லா டிஸ்டிரிக்ட் போர்டாரால் ரூ. 2000- V. நாராயணசாமி படயாச்சிக்கு சேர வேண்டிய பிராவிடன் பண்டு தொகைக்கு மனுதாரி வார்சு சர்ட்டிபிகேட் பெறவேணுமென்று மனுக்கொடுத்து நோட்டீஸுக்கு உத்திரவானது. ஏரங்கி 26—3—59ல் வைக்கப் பட்டிருக்கிறது. அன்று காலை 10 மணிக்கு ஆக்ஷேபணை உள்ளவர்கள் ஷை கோர்ட்டில் ஆஜராகி அறிவித்துக் கொள்ளலாம். அப்படி இல்லாவிடில் ஷை நம்பர் ஒருதலைப்பக்ஷமாக தீர்மானிக்கப்படுமென்பதை அறியவும்.

D. கிருஷ்ணமூர்த்தி அய்யர்,
மனுதார் அட்வகேட்.

4 | 2870 | 292

## ஈரோடு டி. மு. கோர்ட்

O. P. 71 of 58.

செல்வரத்தனம் – 1
கல்யாணசுந்திர குருக்கள் – 2 } மனுதார்கள்

ஈரோடு தாலூகா மொடவாண்டி சத்தியமங்கலம் கிருமம் கல்லகவுண்டன் பாளையத்திலிருக்கும் பழனிவேல் ஆண்டி மகன் பழனியப்பன் – 1. ஷையூர் பாப்பாயி மகள் பாப்பாத்தி – 2. எதிர் மனுதார்கள்.

செல்லமுத்து அய்யரிடமிருந்து பாவாயம்மாள் 9–2–1920 தேதி பெற்றுள்ள 700 ரூபாய் போக்கியதகாதாயதாராய் A.R. Act S. 9 A படி தீர்ந்ததாக டிக்ளேர்செய்ய மனுதார்கள் மனுக்கொடுத்திருப்பதால் அதைப்பற்றி எதிர் மனுதார்களுக்குள்ள ஆக்ஷேபணையைத் தெரிவித்துக் கொள்ள 23–3–59 உ வாய்தா எற்பட்டிருக்கிறது.

ஈ. எம். அண்ணாமலை,
அட்வகேட்.

8/2874/296

## மாயூரம் டி. மு. கோ.

O. S. No. 46/59

வேலூர் ஸ்ரீ மார்க்கசகாயேஸ்வரஸ்வாமி தேவஸ்தானம் By Executive officer—வாதி.

மாயூரம் டவுன் சார்க்கும் பிள்ளையார் கோவில் தெருவிலிருக்கும் Pump fitter என். ஜெகநாதன்—பிரதிவாதி.

ஷை நம்பர் வாதியால் பிரதிவாதியிடமிருந்து பகுதி தொகை ரூ. 366–15–3 கிடைக்கவும் கீழ்மனை வசமாகவும் தாவா செய்யப்பட்டு ஷையாருக்கு சம்மனை ஒட்டி சார்வுசெய்யவும் சிவாஜி பேப்பரில் பிரசுரம் செய்யவும் உத்திரவாகி 28–3–59-ம் தேதி கெடு வைக்கப்பட்டிருக்கிறது. உமக்கு ஏதாவது ஆக்ஷேபணையிருந்தால் ஷை தேதியில் ஷை கோர்ட்டில் பகல் 11 மணிக்கு ஆஜராகி தெரிவித்துக் கொள்ளலாம். தவறினால் கோர்ட்டாரவர்களால் உம்மை எக்ஸ்பார்ட்டி செய்து ஒருதலைபக்ஷமாக தீர்மானிக்கப்படும் என்பதை இதன்மூலம் அறியவும்.

கே. கோவிந்தராஜலு நாயுடு,
அட்வகேட்.

6 | 2872 | 294

## புதுக்கோட்டை டி. மு. கோர்ட்.

O. P. No. 11/1959.

In the matter of the debts due to the deceased Alagumali.

அகிலாம்பாள் — மனுதார்

ஷை மனுதார் தன் புருஷன் அழகுமலைக்கு பாத்தியப்பட்டதும் புதுக்கோட்டை போஸ்டாபீஸிலிருக்கும் துகை ரூ. 134–40 ந. பை. வாங்குவதற்கு வார்சு மனு போட்டு வாய்தா 31–3–59 உ போட்டிருக்கிறது என்பதை இதனால் தெரிவிக்கப் படுகிறது.

சி. ஆர். ஸ்ரீனிவாசன்,
அட்வகேட்.

7/2873/295.



Edited Printed and Published by Thiruloka Sitharam
for the Shivaji Private Limited., at S. N. Printers Tiruchy-2.